உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஜ்ஞாநஸம்பந்தகுருப்யோநம:.

——:0:——

# சைவாநுஷ்டானக் கிரியாவிதி.

இஃது

தூத்துக்குடி:

சைவசித்தாந்த சபையாரால்

இயற்றியது.

---

தூத்துக்குடி:

சைவப்பிரகாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

ஜய௵

விலை அணா 4.

# பிழை திருத்தம்.

ஷடங்க மந்திரங்களில் ஹிம், ஹும் என்று குறிலாக வருபவைகளை ஹீம், ஹூம் என்று நெடிலாகவும்,

பஞ்சப்பிரம மந்திரங்களில் ஹோம், ஹேம் என்று நெடிலாக வருபவைகளை, ஹொம், ஹெம் என்று குறிலாகவும்,

௯-ம் பக்கம் பிராதக்கால சந்தியில், தியானஞ்செய்க என்பதற்கு முன் இருதயத்தில் என்பதையும்,

உ௧-ம் பக்கம் ௭-வது வரியில் அர்க்கியங் கொடுத்து என்பதற்கு முன் காயத்திரியால் என்பதையும்,

இன்னும் யாதேனும் எழுத்துப்பிழை சொற்பிழை இருக்குமாயின் அவைகளையுந் திருத்தி வாசித்துக் கொள்க.

உ௩-ம் பக்கத்திற் கூறிய ஈசாய பித்ரு முதலிய விசேஷ பித்ரு தர்ப்பணம் நிருவாண தீக்ஷிதர் முதலினோருக்கு மாத்திரமுரியது.

சிவமயம்.

# முகவுரை.

நெடிய கடல்சூழ்ந்த இந்நில வுலகின்கண் வழங்குஞ் சமயங்களெல்லாவற்றையுந் தன்னுள் ளடக்கித் தானவற் றொன்றினுள்ளு மடங்காது சமய அரசாய் வீற்றிருக்கும் சைவசமயாநுசாரி களாகிய நமக்கு அநாதிமலமுத்த சித்துருவாகி ய பரமசிவனால் அருளிய முதநூல்களான வேத சிவாகமங்கள் இரண்டும் முக்கியப் பிரமாணமே. அவற்றுள் வேதம் சூத்திரம் போல்வதும், சிவா கமம் பாஷ்யம் போல்வதுமாயினும் வேதம் குறி ப்பாய்விளக்கும் பொருளை சிவாகமம் வெளிப் படையாய்விளக்கியும், வேதம் குறிப்பாய் நிராகரி க்குஞ் சமயங்களைச் சிவாகமம் வெளிப்படையாய் நிராகரித்தும் நிற்கும் ஏதுவால் வேதத்தினும் சிவாகமமே விசேஷமென்பது அவ்விருநூல்களை யுநன்குணர்ந்த மேலோர்கள் கொள்கை. அத் தன்மையவான பெருமைவாய்ந்த சிவாகமங்களில் நாம் உய்தற்குக்கூறுஞ் சாதனங்கள் சரியை கிரி யையோகம் ஞானம் என நான்காம். அச்சாதன ங்களில் ஒழுகுவோருக்கு சிவ தீக்ஷாநுஷ்டானம் இன்றியமையாது வேண்டப்படுவனவாம். அச்

சிவதீக்ஷாநுஷ்டானத்தைக் கைக்கொள்ளாதவர் எக்காரணத்தாலுஞ் சைவராகமாட்டார். அற்றாகவும் நம்மவர்களிற் பெரும்பாலார் மரணபரியந்தம் சிவதீக்ஷாநுஷ்டானமில்லாமலே இருந்துவிடுகிறார்கள் அவர் நிற்க; சிவதீக்ஷை பெற்றுக்கொண்டவருள்ளும் பெரும்பான்மையோர் விதிப்படி அநுஷ்டியாமல் பெறாதவரைப்போலவே விபூதியைமாத்திரம் இட்டுக்கொள்வதும், அதனோடு மூலமந்திரத்தைமட்டுஞ் சிறிதுருச்செபித்துக்கொள்வதுமாயினர். இன்னோர் இவ்வாறு நழுவவிடுவதற்குக்காரணம் யாதெனிற் கூறுதும். அவரவர்கட்குத் தீக்ஷைசெய்வித்த ஆசாரிய ஸ்வாமிகள் ஏககாலத்தில் அநேகம்பிரதிகள் எழுதிக்கொடுக்க வேண்டியதின்நிமித்தம் தாங்கள் கவனிக்கமார்க்கமின்றி தங்கள்தங்கள் வேலைக்காரர்களால் மிகுதியும் எழுத்துப்பிழை சொற்பிழை நிறைந்தனவாயும் பீஜங்கோடி சேர்ந்தனவாயும், சேராதனவாயும், பெரும்பான்மையும் ஸமஸ்கிருதமொழிகளையே கலந்து, ஒரு ஆதீனத்துப்பிரதிக்கு மற்றொரு ஆதீனத்துப்பிரதி மிக வேற்றுமையுடையனவாயும் எழுதிக் கொடுக்கப்படுதலால் உண்மையான விதிகளை விளங்கிக்கொள்ளக்

கூடாமலிருப்பதே. அக்குறைவை நீக்குதற் பொருட்டுச் சென்னைமாநகரத்தின்கண்ணுள்ள மக-ா-ா-ஸ்ரீ கொ. ஷண்முகசுந்தரமுதலியாரவர்களால் தக்க பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்தச்சியற்றிய ஸ்ரீமத் அகோரசிவாசாரிய பத்ததியை முக்கிய ஆதாரமாய்க்கொண்டு அதனோடு உமையொருபாகம் முதலிய பிரபல ஆதீனங்களிலிருந்து கொடுக்கப்பட்ட கையேட்டுப்பிரதிகளையும் அநுசரித்து ஒருவாறு பிழையற எழுதி அச்சிற்பதிப்பித்தனம். இதன்மேலும் யாதேனும்வழுவுளதாகக் காணப்படின் அவைகளை எங்கட்கு அறிவித்தால் இரண்டாம் பதிப்பில் திருத்தி அச்சியற்றச் சித்தமாயிருக்கின்றோம். இந்நூல் சிவதீக்ஷைக்குரிய எல்லா வருணத்தாருக்கும் சகல தீக்ஷையாளருக்கும் பொதுவாய் இயற்றப்பட்டமையின் அநுஷ்டிப்போர் தங்கள் தங்கள்வருண பக்குவநிலைமைக்கு ஏற்ப ஆசாரியர் உத்தரவுப்படி அநுஷ்டித்துக் கொள்ளவேண்டியது.

இனி அநுஷ்டானஞ்செய்வதற்குச் சோம்பிச் சிலர் அநுஷ்டானக் கிரியை மகா வருத்தமுடையதென்றும் அதைச் செய்துமுடிப்பது அரிதென்றும் கூறுகின்றார்கள். அது நியாயமன்று. அநுஷ்டானத்தை விதிப்படி செய்துமுடிக்கவேண்

டுமாயின் ஐந்து நிமிஷம் போதுமானதாகும். இன்னோர் தங்கள் ஜீவியகாலமெல்லாம், நீர்க்குமிழிபோல் நிலையற்று ஒழிந்துபோகும் பொய்யுடலோம்புதற்பொருட்டு நெற்றிவேர்வை நிலத்திற் சிந்தப்பாடுபடுகின்றனரே. அக்காலத்தில்ஒருசிறு பொழுதைத் தம்முயிர்க்குறுதிபயப்பதான அழிவில்லாத சிவானந்தப் பெருவாழ்வையடைவிப்பதாயுள்ள சிவதீக்ஷாநுஷ்டானவிஷயமாய் ஏன் செலவிடக்கூடாது. இப்புத்தகத்துட் டோன்றுங் கிரியைகள் வாசிப்பதற்கு விரிவாய்த்தோன்றினும் பழகியபின் செய்வது சுலபமாய் முடியும். அநுஷ்டிப்போர் இந்நூலை அநுஷ்டானவிதி தெரிந்தவர்களிடம் ஒருதரம் வாசித்துப் பொருள் விளங்கிக்கொள்ளின் அநுஷ்டானக் கிரியைகளை எளிதிற்பழகிக்கொள்ளலாம்.

இந்நூலை உமையோருபாகமுதலிய பிரபல ஆசாரிய ஸ்வாமிகளின் பார்வைக்கு அனுப்பிப் பின்னல் அச்சியற்றவேண்டுமென்று கொண்டிருந்த எங்கள் எண்ணத்தை சில அசந்தர்ப்பங்களால்கைவிடநேர்ந்தது. அதை எல்லா ஆசாரிய ஸ்வாமிகளும் பொறுத்து இப்புத்தகத்தை தீக்ஷாவான்களிடம் பரவச்செய்யும்படி வேண்டிய ஏற்பாடு செய்தருள வேண்டுகிறேம்.

——(*)——

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானஸம்பந்தகுருப்யோநமஃ

# சைவாநுஷ்டானக்கிரியாவிதி.



சூரியன் உதிக்க ஐந்துநாழிகைக்குமுன் நித்திரைவிட்டெழுந்து ஜலம் வாயிற்கொண்டு இடப்புறத்திலே கொப்பளித்து இயன்ற அளவு சரீரசுத்திசெய்து ஆசமனம்பண்ணி வடக்குமுகமாகவேனும், கிழக்குமுகமாகவேனும் இருந்து விபூதி தரித்துக்கொண்டு குரு உபதேசித்தபிரகாரஞ் சிவபெருமானைத் தியானித்து சிவ மூல மந்திரத்தை இயன்றமட்டுஞ்ஜெபித்து அருட்பாக்களினாலே உச்சவிசையோடு தோத்திரஞ்செய்ய வேண்டும். சூரியன் உதிக்க ஐந்து நாழிகைக்குமுன் எழுவது உத்தமம்; மூன்றேமுக்கால் நாழிகைக்குமுன் எழுவது மத்திமம்; உதயத்தில் எழுவது அதமம்.

பின்பு அவசியகருமம், சௌசம், தந்ததாவனம், ஸ்நாநம், இவைகளை விதிப்படி முடித்துத் தோய்த்துலர்ந்த வஸ்திரந்தரித்து வடக்குமுகமாக இருந்து, கடவுளையும், குருவையும் தியானித்து விபூதியை உத்தூளனமாய் நன்றாய் அணிந்துகொண்டு, போகத்தை விரும்பினோர் கிழக்குமுகமாகவும், மோக்ஷத்தை விரும்பி

ேனார் வடக்குமுகமாகவும் இருந்துகொண்டு அநுஷ்டானஞ்செய்க. ஸ்நாநஞ்செய்ய இயலாதோர் இயன்ற அளவு சரீரசுத்திசெய்துகொள்க. பிராதக்கால அநுஷ்டானம் நக்ஷத்திரங்கள் தோன்றும்பொழுதே செய்வது உத்தமம்; நக்ஷத்திரங்கள் மறைந்தபொழுது செய்வது மத்திமம்; சூரியன் உதிக்கும்பொழுது செய்வது அதமம். மத்தியான அநுஷ்டானம் பதினைந்து நாழிகையாகிய மத்தியான காலத்திலே செய்வது உத்தமம்; மத்தியானகாலத்துக்கு ஒரு நாழிகைக்குமுன்னேசெய்வது மத்திமம்; மத்தியானகாலத்துக்குப்பின் ஒரு நாழிகையிலே செய்வது அதமம். சாயங்கால அநுஷ்டானம் சூரியன் அஸ்தமிக்கும்பொழுது செய்வது உத்தமம்; அஸ்தமயனமானபின் நக்ஷத்திரங்கள் தோன்றுமுன் செய்வது மத்திமம்; நக்ஷத்திரங்கள் தோன்றும்போது செய்வது அதமம். சந்தியாகாலந் தவறின் சம்ஹிதா மந்திரஞ்செபித்துக்கொள்க.

சமய தீக்ஷிதருக்குப் பிராதக்கால அநுஷ்டானம் ஒன்றேஉரியது. விசேஷ தீக்ஷிதருக்குப் பிராதக்கால அநுஷ்டானம், சாயங்கால அநுஷ்டானம், இரண்டே உரியது. நிருவாண தீக்ஷிதருக்குப் பிராதக்கால அநுஷ்டானம், மத்தியான அநுஷ்டானம், சாயங்கால அநுஷ்டானம் மூன்றேஉரியது. ஆசாரியருக்கு நான்கு சந்திகளும் உரியது. சமய தீக்ஷிதர் விசேஷ தீக்ஷிதர்கள் மூன்று சந்திகளையும் அநுஷ்டிக்கலாம்.

சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# நூல்.

———:)o(:———

## க. கணபதிவணக்கம்.

ஓம் ஹாம் மகாகணபதியேநம: என்று சிரசில் மும்முறை குட்டிக்கொள்க.

## உ. குருவணக்கம்.

ஓம் ஹாம் சிவகுருவேநம: என்று திரியாங்க நமஸ்காரஞ்செய்க.

## ௩. அஷ்டஸமஸ்காரம்.

சுத்தஜலத்தில்.

க-வது நிரீக்ஷணம்— பெருவிரல் அணிவிரல் சேர்த்து, ஓம் ஹாம் சிவாயநம: என்று வலக்கண், நெற்றிக்கண், இடக்கண்களை முறையே தொட்டு ஜலத்தைப்பார்க்க.

உ-வது புரோக்ஷணம்—வலதுகை விரல்களைச் சேர்த்து நீட்டுதலாகிய பதாகை முத்திரையால் ஓம்ஹ: அஸ்திராயநம: என்று மேலே உயர்த்துக.

௩-வது தாடனம்—ஓம் ஹ: அஸ்திராயஹூம்பட் என்று வலதுகை சுட்டுவிரலால் கீழ்நோக்கித்தட்டுக.

௪-வது அப்யுக்ஷணம்—ஓம் ஹைம் கவசாய வௌஷட் என்று பதாகைமுத்திரையால் ஜலத்தை மூடுக.

ரு-வது தாளத்திரயம்—ஓம் ஹ: அஸ்திராயபட் என்று வலதுகை நடு மூன்று விரல்களால் இடதுஉள்ள ஙகையில் மும்முறை தட்டுக.

௬-வது திக்குபந்தனம்—வலதுகைப் பெருவிர லடியைச்சுட்டுவிரலால் தொட்டு ஓம் ஹ: அஸ்திராய பட் என்று கிழக்குமுதல் ஈசானம்வரை எட்டுத்திக்குக ளிலுந்தெறிக்க.

எ-வது அவகுண்டனம்—ஓம் ஹைம் கவசாய வௌஷட் என்று சுட்டுவிரலால் வளைக்க.

அ-வது தேநு முத்திரை—இரு கரங்களையுங் கூட்டி, இடை இடை கோர்த்துச் சுட்டுவிரல்களை நடு விரல்களோடும், சிறுவிரல்களை அணிவிரல்களோடும் சேர்த்தலாகிய தேநுமுத்திரையால் ஓம் ஹாம் சிவாய வௌஷட் என்று அமிர்தம் பொழிவதாய்ப் பாவிக்க.

## ௪. மஹா முத்திரை.

ஓம் ஹாம் சிவாயவௌஷட் என்று இருகைப்பெ ருவிரல்களையும் உள்ளடங்கப்பின்னி மற்றவிரல்களை நீட்டி ஜலத்தை மூடுக.

## ௬. அஸ்திரசந்தி.

ஓம் ஹ: அஸ்திராயஸ்வாஹா என்று நடு மூன்று விரல்களால் ஜலத்தை மும்முறை சிரசில் ப்ரோக்ஷித்து இருகைப் பெருவிரல்களையும் உள்ளடக்கிச் சேர்த்து ஓம் ஹ: அஸ்திராயஸ்வாஹா என்று மும்முறை தர்ப்பித்து ஓம் ஹ: அஸ்திராயநமஹ என்று பத்துரு ஜெபித்துத் திரும்பவும் ஒருகால் தர்ப்பிக்க.

## ௬. ஆசமநம்.

பெருவிரலுள்ளடங்கக் கையைப் பசுவின் காது போலக் குவித்தலாகிய கோகர்ணமுத்திரையால் உழுந்தமிழ்ந்து ஜலங்கொண்டு ஓம் ஹாம் ஆத்மதத்வாயஸ்வதா, ஓம் ஹீம் வித்யாதத்வாயஸ்வதா ஓம் ஹூம் சிவதத்வாயஸ்வதா என்று இடை இடை கைகழுவி மும்முறை ஆசமிக்க.

## ௭. அதரசுத்தி.

அதரத்தைப் பெருவிரலடியால் ஓம் ஹ: அஸ்திராயபட் என்று வலமிடமாகவும், உள்ளங்கையினலே கீழ்நோக்கியுக் துடைக்க.

## ௮. தொடுமிடம்.

பெருவிரல் அணிவிரல் சேர்த்தலாகிய திவ்ய முத்திரையால் ஓம்ஹாம் ஹிருதயாயவௌஷட் என்று நாடி, நாசிகள், கண்கள், காதுகள், நாபி, ஹிருதயம், புஜங்கள், சிரசாகிய இப்பன்னிரண்டு தானங்களையும்

முறையே வலமிடமாகத் தொடுக.

## கூ. கரசுத்தி.

ஓம் ஹ: அஸ்திராயபட் என்று இடதுகை நடு மூன்று விரல்களால் வலது அகங்கையில் ஒரு தரமும், புறங்கையில் ஒரு தரமும், வலதுகை நடுமூன்று விரல்களால் இடது அகங்கையில் இரண்டு தரமும், புறங்கையில் இரண்டு தரமுந்துடைக்க.

## ௰. அமலஸ்நாநம்.

விபூதியை யெடுத்து இடது கரத்தில் அமைத்து நிரீக்ஷணம், புரோக்ஷணம், தாடநம், அப்யுக்ஷணம், திக்குபந்தனம், அவகுண்டனம் செய்து விதிப்படி தகிக்கப்படாத அகற்ப விபூதியாகில் ஓம் ஹாம் நிவிர்த்திகலாயை நமஹ ஓம் ஹீம் பிரதிஷ்டா கலாயை நமஹ ஓம் ஹூம் வித்தியர்கலாயை நமஹ ஓம் ஹைம் சாந்தி கலாயை நமஹ ஓம் ஹௌம் சாந்தியாதீதகலாயை நமஹ என்னும் கலாமந்திரத்தாலும், * ஓம் ஹோம் ஈசானமூர்த்தாய நமஹ ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நமஹ, ஓம் ஹூம் அகோர ஹிருதயாய நமஹ, ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாய நமஹ, ஓம் ஹம் சத்தியோஜாத மூர்த்தாய நமஹ

---

* இதுமுதல் ஐந்தும் பஞ்சப்பிரம மந்திரம்.

0 ஓம்ஹாம்ஹிருதயாய நமஹ, ஓம்ஹீம் சிரசே நமஹ, ஓம் ஹூம் சிகாய நமஹ, ஓம் ஹைம் கவசாயநமஹ, ஓம் ஹௌம் நேத்திரப்பியோ நமஹ, ஓம்ஹ: அஸ்திராயநமஹ என்னும் * சம்ஹிதா மந்திரத்தாலும் அபிமந்திரித்து, அதில் அணுவளவு விபூதியைத் திவ்ய முத்திரையால் எடுத்து, ()இடையூறு நிவிர்த்தியின்பொருட்டு நிருதித்திசையில் ஓம் ஹ: அஸ்திராயபட் என்று தெறித்துவிட்டு, மீட்டும் அதே முத்திரையால் சிறிது விபூதியை எடுத்து ஓம் ஹ: அஸ்திராயபட் என்று சிரசுமுதல் பாதபரியந்தம் பரிசித்து அபிஷேகித்துக் கொள்க. விதிப்படி சிவாக்னியால்தகிக்கப்பட்ட கற்ப, அநுகற்ப விபூதியாகில் கலா மந்திரஞ்செபிக்கவேண்டுவதில்லை.

## ௰௧. பஸ்மஸ்நாநம்.

பின்பு சிறுவிரல் நீங்கிய நான்கு விரல்களைச் சேர்த்தலாகிய நிரோதான முத்திரையால் ஜலம் விட்டு ஓம் ஹைம் கவசாயநமஹ எனக்குழைத்து ஓம்ஹோம் ஈசானமூர்த்தாய நமஹ என்று சிரசில் ஓரங்குலமும், ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நமஹ என்று நெற்றி

---

0 இது முதல் ஆறும் ஷடங்க மந்திரம்.

* பஞ்சப்பிரமமந்திரமும் ஷடங்கமந்திரமுஞ் சேர்ந்தது சம்ஹிதா மந்திரம்.

() இவ்வாறன்றி அபிமந்திரிப்பதற்குமுன்பே அணுவளவு விபூதியை எடுத்து இராக்ஷதாம்ஸமாகத்தெறிப்பதுமொரு விதி.

யில் ஆறங்கூலமும், ஓம் ஹூம் அகோரஹிருதயாய நமஹ என்று மார்பில் ஆறங்கூலமும், ஓம் ஹிம் வாம தேவதுஷ்யாய நமஹ என்று உந்தியில் ஓரங்கூலமும், ஓம் ஹம் சத்தியோஜாதமூர்த்தயே நமஹ என்று முழந்தாள்களில் ஓரங்குலமுந்தரித்து ஜலந்தொட்டுக் கவசத்தால் குழைத்து, ஓம் ஹம் சத்தியோஜாதமூர்த்தயே நமஹ என்று புஜங்களில் ஆறங்குலமும் அதே மந்திரத்தால் மற்றைய அங்கங்களில் ஒவ்வொரு அங்குலமும், சுத்தியின்பொருட்டு இடை இடையே அஸ்திரமந்திரத்தை நினைந்துகொண்டணிந்து கவசமந்திரத்தால் கைகழுவி, கழுவிய ஜலத்தை வலதுகையை முட்டியாய்ப்பிடித்து இடதுகையால் மூடிக்கொள்ளுதலாகிய கும்ப முத்திரையால் பிடித்துக்கொள்க.

## ௰உ. ஆக்நேயஸ்நாநம்.

பின்பு கும்பமுத்திரையாகப் பிடித்த அந்த ஜலத்தைப் பஞ்சப்பிரம மந்திரஞ் ஜெபித்து ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று சிரசில் புரோக்ஷித்துக்கொள்க. பின்பு ஓம்ஹ: அஸ்திராயஹூம்பட் என்று தாளத்திரயஞ்செய்து சித்திய விபூதியைப் பெருவிரல் நீங்கிய மற்றைய விரல்களைக் கெட்டியாய்ப் பிடித்தலாகிய சம்ஹார முத்திரையால் ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ என்று இருதயத்தில் ஒடுக்கிக்கொள்வதாய்ப் பாவிக்க.

## ௧௩. மானதஸ்நாநம்.

பின்பு ஆசமனம், அதாசுத்திசெய்து தொடுமிடம் தொட்டு நாதாந்தமாக ஓம் ஹாம் ஹௌம் சிவாயநமஹ என்று உச்சரித்து புருவமத்தியாகிய பிந்து ஸ்தானத்தி லிருக்கிற அமிர்தத்தால் தன்னுடைய தேகத்தை உள்ளும் புறம்பும் நனைந்ததாகப் பாவிக்க.

## ௧௪. சகளீகரணம்.

### (க) காநியாசம்.

பின்பு கரசுத்திசெய்து ஓம் ஹௌம் சக்தயே வௌஷட் என்று இரண்டுகைப் பெருவிரல்களையும் உள்ளடக்கிக் கைகளைக்கூப்பிச் சத்தியமிர்தத்தால் கைகள் நனைந்ததாய்ப் பாவித்துப் பின்பு குவித்த கைகளை விரித்து, பெருவிரல்களினால் உள்ளங்கைகளுக்குள் ஓம் ஹாம் சிவாசனாய நமஹ என்றும், ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமுர்த்தயே நமஹ என்றும், சுட்டு விரல்களால் பெருவிரல்களை ஓம் ஹோம் ஈசானமூர்த்தயே நமஹ என்றும், பெருவிரல்களால் சுட்டுவிரல்களை ஓம் ஹேம் தத்புருஷவக்த்ராய நமஹ என்றும், நடுவிரல்களை ஓம் ஹும் அகோரஹிருதயாய நமஹ என்றும், அணிவிரல்களை ஓம் ஹிம் வாமதேவகுஹ்யாய நமஹ என்றும், சிறுவிரல்களை ஓம் ஹம் சத்தியோஜாதமூர்த்தயே நமஹ என்றும், இரண்டு உள்ளங்கைகளை ஓம் ஹாம் ஹௌம் வித்யாதேகாய நமஹ என்றும், பின்பு நடுமூன்று விரல்களினால் அதே ஸ்தானத்தை

ஓம் ஹௌம் நேத்திரப்யோ நமஹ என்றும் நியசிக்க. அதன்பின்புமுள்ளங்கைகளிற் பெருவிரல்களை மடக்கி ஓம் ஹாம் ஹௌம் சிவாய நமஹ என்று ஆவாஹனமாகவும் பெருவிரல்களாற் சிறுவிரல்களை ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ என்றும், அணிவிரல்களை ஓம் ஹீம் சிரசேஸ்வாஹா என்றும், மத்தி விரல்களை ஓம் ஹூம் சிகாயைவஷட் என்றும், சுட்டுவிரல்களை ஓம் ஹைம் கவசாயவௌஷட் என்றும், சுட்டுவிரல்களாற் பெருவிரல்களை ஓம் ஹ: அஸ்திராயபட் என்றும், நியசித்து, ஓம் ஹைம் கவசாயவௌஷட் என்று அவகுண்டனஞ்செய்து ஓம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று அஞ்சலிசெய்க. இதில் பஞ்சப்பிரம மந்திரத்தால் நிசிக்கும்போது விரல்நுனிகளையும் ஷடங்கமந்திரத்தால் நிசிக்கும்போது விரல்மத்திகளையும் தொடுக.

## (௨) அங்கநியாசம்.

பின்பு, ஓம் ஹாம் சிவாசனாய நமஹ ஓம் ஹாம் ஹம் ஹாம் சிவமூர்த்தயேநமஹ என்று திவ்ய முத்திரையால் இருதயத்தையும், பின்பு,வலதுகைவிரல்களை முஷ்டியாகப்பிடித்துப் பெருவிரலைக்கொண்டு ஈசான மந்திரத்தால் சிரசையும், அப்பெருவிரலோடு சுட்டுவிரலைச்சேர்த்துத் தத்புருஷமந்திரத்தால் நெற்றியையும், நடுவிரலைச்சேர்த்து அகோர மந்திரத்தால் மார்பையும், அணிவிரலைச்சேர்த்து வாமதேவமந்திரத்தால் நாபியையும் சிறுவிரலைச்சேர்த்து சத்தியோஜாதமந்திரத்தால் வலமிடமாக முழந்தாள்களையும், அணிவிரலைச்சேர்த்து ஓம் ஹாம் ஹௌம் வித்தியாதேகாய நமஹ

என்று இருதயத்தையும், சிறுவிரல் பெருவிரல் மடக்கி நடு மூன்று விரல்களால் ஓம் ஹௌம் நேத்திரப்பியோ நமஹ என்று கண்களையும், பெருவிரலோடு அணிவிரலைச் சேர்த்து மூலமந்திரத்தால் இருதயத்தையும், சிறுவிரலைச்சேர்த்து ஓம் ஹாம் ஹிருதயாய நமஹ என்று மீட்டும் அதேஸ்தானத்தையும், அணிவிரலைச் சேர்த்து ஓம் ஹீம் சிரசேஸ்வாஹா என்று சிரசையும், நடுவிரலைச் சேர்த்து ஓம் ஹூம் சிகாயைவஷட் என்று சிகையையும், இரண்டுகைச் சுட்டுவிரல்களால் ஓம் ஹைம் கவசாயவௌஷட் என்று கண்டத்திலிருந்து ஸ்தனமத்தியம்வரையிலும், ஓம்ஹ: அஸ்திராயபட் என்று அணிவிரல்களால் வலமிட்டமாக உள்ளங்கைகளையும் நியசிக்க (தொடுக)பின்பு தாளத்திரயமும் சிரசில் திக்குபந்தனம் அவகுண்டனமுஞ்செய்து சிரசுமுதல் பாதபரியந்தம் ஹாம் ஹௌம் சிவாய வௌஷட் என்று மஹா முத்திரை கொடுக்க.

## ௰௫. பிராணாயாமம்.

வலதுநாசியை வலதுகைப் பெருவிரலால் அடைத்து அஸ்திரஞ்ஜெபித்தும், பின்பு அணிவிரலால் இடது நாசியையடைத்து வலது நாசியைத் திறந்து அதே மந்திரஞ் ஜபித்தும் சோதனைசெய்க. பின்பு வலதுநாசியைப் பெருவிரலால் அடைத்து சம்ஹிதை ஜெபித்து பூரகம் (வாயுவை உள்ளே வாங்குதல்) செய்து, இடது நாசியை அணிவிரலால் அடைத்து

அதே மந்திரத்தால் கும்பகம் (உள்ளே வாங்கிய வாயுவை புறம்போகாமல் நிறுத்துதல்) செய்து, வலது நாசியைத்திறந்து அம்மந்திரத்தாலேயே ரேசகஞ் (நிறுத்தியவாயுவை வெளியில் விடுதல்) செய்து, மூலத்தால் வலச்செவியில் வலக்கையால் தொடுக. *

௰சா அமிர்தீகரணம்.

வலதுகைச் சுட்டுவிரலை வளைத்து மற்றைய விரல்களை மடக்குதலாகிய அங்குச முத்திரையால் பிந்துஸ்தானத்தைத்தொட்டு ஓம்ஹாம்ஹிருதயாயவௌஷட் என்று அமிர்தத்தை எடுத்ததாகப்பாவித்து கும்ப முத்திரையால் நீரிடைவைத்துப் பதாகையால்மூடி மூலமந்திரத்தை அபிமந்திரித்துச் சிவதீர்த்தமாகப் பாவித்துத் திக்குபந்தனம் அவகுண்டனஞ்செய்து, தேநு முத்திரை கொடுக்க.

---

* இப்பிராணாயாமத்தின் பயன் பூரகத்தினால் சுத்த வாயுவை உள்ளுக்குப்பூரித்தலும், கும்பகத்தால் அவ்வாயுவைச் சரீரமுழுமையும் வியாபிக்கச்செய்தலும், ரேசகத்தால் ஆங்குள்ள அசுத்த வாயுவை வெளிப்படுத்துதலும், நிகழ்தலால் சில வியாதிகள் அணுகாதிருப்பதற்கும், அணுகிய வியாதிகளிற் சில நீங்குதற்கும் ஏதுவாம். இன்னும் கும்பகஞ்செய்வதை நாளடைவில் தேகசக்திக்குத் தக்கவாறு விநாடி விநாடியாய் அதிகப்படுத்திவரின் ஆயுள் விர்த்திக்கும், யோகாப்பியாசத்திற்கும் அனுகூலமாயிருக்கும்.

## ௰எ. சந்தியாவந்தனம்.

### (க) பிராதக்காலசந்தி.

ப்ராம்ஹீ சக்தி தியான சுலோகம்.

ரக்தபூஷாம்பராம்ரக்தாஞ்ஜடாயஜ்ஞோபவீதிநீம்
ஹம்ஸபத்மாஸநாம்பாலாம்சதுர்வக்த்ராஞ்சதுர்புஜாம்
ஸ்ருகக்ஷமாலிநீம்தக்ஷேவாமேதண்டகமண்டலாம் [ரே
ப்ராம்ஹீமஷ்டத்ருஸீம்த்யாயேத்ப்ராதஸ்தாரகிதேம்ப

என்றபடி சிவந்த பூஷணமும், சிவந்த பட்டாடையும், ஜடை, பூணூலும், அன்னவாகனத்தின்மீது பத்மாசனத்திலுட்கார்ந்திருக்கையும், பாலப்பருவமும், நான்கு முகமும், நான்கு கைகளும், வலக்கரங்களில் சிருக்கு ஜெபமாலிகையும், இடக்கரங்களில் தண்டுகமண்டலமும், சாத்வீக குணமும், ப்ரம்ஹ அதிஷ்டதையும் சரஸ்வதிசொரூபமுமுடையவளாயிருக்கிற ப்ராம்ஹிசக்தியை சர்வகிர்த்தியங்கட்கும் சாக்ஷியாயிருக்கிற சிவசக்தியாக நிக்ஷயித்து தியானஞ்செய்க. இது பிராதக்காலத்திற்கு.

### (உ) மத்தியான்சந்தி.

வைஷ்ணவி சக்தி தியான சுலோகம்.

சுக்லாம்பரதராம்சுக்லாம்வனமாலோபவீதிநீம்
தார்க்ஷபத்மாஸனாம்ஸீநாமுத்பின்னயௌவநாம்
சங்கசக்ரதராம்வாமேதக்ஷணேஸகதாபயாம் [ணம்.
தியாயேன்மாத்யந்திநேதேவீம்வைஷ்ணவீம்சர்வ பூஷ

என்றபடி, வெண் பட்டாடையும், வெண்மைவடிவமும், துளபமாலையும், பூணூலும், கருடன்மீது பத்மாசனத்தி லுட்கார்ந்திருக்கையும், யௌவன வயசும், இடதுகைகளில் சங்குசக்கரமும், வலதுகைகளில் கதை, அபயமும், இராஜசகுணமும், விஷ்ணு அதிஷ்டதையும், மஹா லக்ஷ்மி சொரூபமும் உடையவளாயிருக்கிற வைஷ்ணவீ சக்தியைச் சர்வகிர்த்தியங்கட்குஞ் சாக்ஷியாயிருக்கிற சிவசக்தியாக நிக்ஷேபித்துப்புருவமத்தியில் தியானிக்க. இதுமத்தியானத்திற்கு.

### (௩) சாயங்காலசந்தி.

### ரௌத்திரீ சக்தி தியான சுலோகம்.

நீலோத்பலதளாபாஸாம்கிஞ்சிச்சலிதயௌவனாம்[தாம்
சதுர்ப்புஜாம்த்ரிநேத்ராஞ்சஜடாமகண்டேந்துமண்டி
த்ரிசூலாக்ஷதராம்தக்ஷேவாமேஸாபயஸக்திகாம்
ரௌத்திரீம்தியாயேத்வ்ருஷாப்ஜஸ்தாம்காலோர்த்தாஸ்
[தமிதேருணே.

என்றபடிகருநெய்தற்புஷ்பம்போல் காந்தியுள்ளவளும், சற்றுமுதிர்ந்த யௌவனமும், நான்கு கைகளும், மூன்று கண்களும், சடையும, பூணூலும், சிரசிலே மூன்றாம் பிறைச் சந்திரனும், வலதுகைகளில் சூலமும் ஜெபமாலையும், இடது கைகளில் அபயமும் சக்திஆயுதமும், ரிஷபவாகனத்தின்மீது பத்மாசனத்தி லுட்கார்ந்திருக்கையும், தாமஸகுணமும், பார்வதி சொரூபமுமுடையவளாயிருக்கிற ரௌத்திரிசக்தியை சர்வகிர்த்

தியங்கட்கும் சாக்ஷியாயிருக்கிற சிவசக்தியாக நிக்ஷயி த்து சிரசில் தியானிக்க. இது சாயங்காலத்திறகு.

## (௪) அர்த்தராத்திரிசந்தி.

### ஸ்லோகம்.

மிர்ணாளதந்துவத்தந்வீரக்தாசுக்லாஸிதேத ரா
துர்யாத்வரூபாகிருஷ்ணாவாயாநிஸீதேவிபாவ்ய தே.

என்றபடி, கறுத்தநிறமுள்ளவளாய் தாமரை நூல்போல சூக்ஷமரூபமுள்ளவளாய் நிர்க்குணியாயிருக்கிற நாலாங் காலசக்தியை வெண்மை, கறுப்பு சிவப்பு என்னும் வருணங்களில் எந்த வருணமாயேனும் த்வாதசாந்தத் தில் தியானிக்க. இது அர்த்தராத்திரிக்கு.

இந்த அர்த்தராத்திரிசந்தி ஆசாரியர்கட்கும், ஆசாரியர் புத்திரர்கட்கும், சாதகாசாரியர்கட்குமட்டு முரியது.

## ௰அ. மார்ஜ்ஜனம்.

சிவதீர்த்தத்தைவலக்கையினலெடுத்து ஹிருதயத் தால் இடதுகையில் வார்த்து சம்ஹிதைகளினல் ஒருக் கால் அபிமந்திரித்து கும்பமுத்திரையினலே வௌஷ டந்த மூலத்தால் சிரசில் அபிஷேகித்துக்கொள்க. பின்பு ஜலத்தை ஸம்ஹிதைகளினல் அபிமந்திரித்து வலதுகையால் எடுத்து இடதுகையில் ஹிருதயத்தால் தர்ப்பையுடன் வார்த்து, விரல் இடைகளின் வழியாய் ஒழுகுகிற ஜலத்தை வலது கையால் வௌஷடந்த

சம்ஹிதையால் மந்திரத்துக் கொருமுறை சிரசில் ப்ரோக்ஷித்துக்கொள்க.

௰கூ. அகமர்ஷணம்.

பின்பு, மீதியாயிருக்கும் ஜலத்தை வலது கையில் விட்டு சுத்தமாகவும், தர்ம சொரூபமாகவும் பாவித்து, பூரகவாயுவினால் அந்த ஜலம் இடது நாசியின்வழியாய் உள்ளே பிரவேசித்ததாகப் பாவித்துக்கும்பகஞ்செய்து அந்த வாயுவினால் அந்த ஜலம் உள்ளுண்டான பாபத்தைக் கெடுத்ததாகத் தியானஞ்செய்து, பாபம் மைக்குழம்புபோல வலது நாசியின் வழியாய்ப் புறப்பட்டதாகத் தியானித்து ஹூம்படாந்த அஸ்திரத்தினாலே வலதுகாற் பெருவிரலில் ஜ்வாலியா நிற்கிற அக்னிவர்ணமான வஜ்ரசிலையிலே அந்த ஜலத்தைவிட்டுப் புருவ நெருப்புடன் போக்குக.

உ௰. சதாசிவத்தியானம் காயத்ரிஜெபம்.

பின்பு, கைகழுவி ஆசமனம், அதரசுத்திசெய்து தொடுமிடந்தொட்டு சகளீகரணஞ்செய்து வலதுகையால் அமிர்தமயமான ஜலத்தை எடுத்துக் க்வசத்தால், தன்னைச்சுற்றி சூரியமண்டல மத்தியஸ்தராயிருக்கிற சதாசிவமூர்த்தியைத் தியானஞ்செய்க. அல்லாமலும்,

ஸ்லோகம்.

தப்தகாஞ்சனவர்ணாபாம்ஸமயஸ்தாபநீம்பரா ம்
சதுர்புஜாம்த்ரிணேத்ராஞ்சகாயத்ரீம்ஸததோதிதா ம்
வராபயாக்ஷமாலாஞ்சகுண்டிகாம்விப்ரதீங்கரை ஹி.

என்றபடி பொன்னிறமும் நான்கு கைகளும் மூன்று நேத்திரங்களுமுள்ளவளாய், வரம் அபயம் ஜபமாலைகமண்டலமிதுகளை கரத்தில் தரித்திருப்பவளாய்த் தியானித்துக்கொண்டு ஓம் ஹாம் தன்மஹேசாயவித்ம்ஹேவாக்விசுத்தாயதீமஹி தன்னோ சிவப்ரசோதயாத் என்க.

## உ௰க. தர்ப்பணம்.

பின்பு தர்ப்பையைக் கையில் வைத்துக்கொண்டு மூன்றுமுறை அர்க்கியங்கொடுத்து, பத்துருவாவது எழுருவாவது காயத்திரியை ஜெபித்து ஓம் ஹாம் ஹௌம் சிவாயஸ்வாகா என்று மூன்றுமுறை அர்க்கியங்கொடுத்து அந்த மந்திரத்தையே பத்துரு ஜெபித்து ப்ரதக்ஷணஞ்செய்து ஸ்வாகாந்தமான ஸம்ஹிதைகளால் ஒவ்வோர் முறை தர்ப்பித்து, பின்பு ஓம் ஹாம் சர்வேப்யோமந்திரேப்யோஸ்வாகா ஓம் ஹாம் சர்வேப்யோர் தேவோப்யோ ஸ்வாகா என்று விரல் நுனியாலே தர்பபிகக.

பின்பு கண்டத்திலே உபவீதமிட்டுத் தர்ப்பையின் அடிநுனிகளைக் கையில் வைத்துக்கொண்டு ஓம் ஹாம் சர்வேப்யோருஷிப்யே நமஹா என்று விரலிடைகளாலும் ஓம் ஹாம் சர்வேப்யே மனுஷ்யேப்யோவஷட் என்று சிறுவிரலடியினாலும், ஓம் ஹாம் சர்வேப்யோ பூதேப்யோவௌஷட் என்று கரதல மூலத்தாலுந் தர்ப்பிக்க.

பின்பு, வலமாக உபவீதமிட்டுத் தர்ப்பையை மடித்து எள்ளுடன் ஓம் ஹாம் சர்வேப்யோபித்ருப்யஸ்வதா ஓம் ஹாம் சர்வேப்யோ மாத்ருப்யஸ்வதா ஓம் ஹாம் சர்வேப்யோ ஞாதிப்யஸ்வதா ஓம் ஹாம் சர்வேப்யோ ஆசார்யேப்யஸ்வதா என்று பித்ருக்களுக்கு சுட்டுவிரலுக்கும் பெருவிரலுக்கும் நடுவால் தர்ப்பிக்க.

பின்பு, அக்நியால் தஹித்தவர்களும் தஹிக்கப்படாதவர்களுமான என் குலபிதருக்களே! பூமியில் தர்ப்பிக்சப்பட்ட இந்த ஜலத்தினால் நற்கதியும், திர்ப்தியும் அடையுங்கள் என்றுசொல்லிப் பிரார்த்தித்துஓம்ஹாம் அஸ்திராயபட் என்று தர்ப்பையை எள்ளுடன் ஜலக்கரையிறபோடுக.

பின்பு, இடமாக உபவீதமிட்டு தர்ப்பையுடன் ஓம் ஹாம் கணபதியேஸ்வாகா, ஓம்ஹாம்தேவ்யைஸ்வாஹா ஓம் ஹாம் ஸ்கந்தாயஸ்வாகா, ஓம் ஹாம் நந்திநே ஸ்வாகா ஓம் ஹாம மகா காளாயஸ்வாகா, ஓம் ஹாம் பிருஙகிணேஸ்வாகா, ஓம் ஹாம் விருபாயஸ்வாகா, ஓம் ஹாம் சண்டாயஸ்வாகா என்று தர்ப்பிதத்துத் தர்பபையை அப்புறம் போட்டுவிடுக.

## விசேஷ தர்ப்பணம்.

இதைவிட விஸ்தாரமாகத் தர்ப்பிக்கவேண்டின், முன்கூறியதுபோல மூலமந்திரமுதலான மந்திரங்களை ஸ்வாகாந்தமாகத் தர்ப்பித்து விரல் நுனியாலே ஓம் ஹாம் ஆதித்யேப்யஸ்வாகா, ஓம் ஹாம் வசுப்ய ஸ்வாகா, ஓம் ஹாம் ருத்ரேப்யஸ்வாகா, ஓம் ஹாம் விஸ்வேப்யஸ்வாகா ஓம் ஹாம் சாத்யேப்யஸ்வாகா ஓம் ஹாம் மருத்ப்யஸ்வாகா, ஓம் ஹாம் ப்ருகுப்யஸ்வாஹா, ஓம் ஹாம் அங்கிரேப்யஸ்வாகா என்று அஷ்டதேவகணங்களுக்குத் தர்ப்பிக்க.

பின்பு கண்டத்திலே உபவீதமிட்டு ஓம் ஹாம்அத்ரயேநமஹ ஓம் ஹாம் வசிஷ்டாய நம: ஓம் ஹாம் புலஸ்த்யாய நம: ஓம் ஹாம க்ரதவே நம: ஓம் ஹாம் பாரத்வஜாய நம: ஓம் ஹாம் விஸ்வாமித்ராயநம: ஓம் ஹாம் ப்ரசேதஸேநம: ஓம் ஹாம் ருசகாயநம: ஓம் ஹாம்அகஸ்த்யாயநம: ஓம் ஹாமததீசயேநம: ஓம் ஹாம் துர்வாஸஸேநம: என்று ருஷிகள் பதினொருவர்க்கும் விரல் நடுவினால் தர்ப்பிக்க.

ஓம்ஹாம் சநகாயவஷட் ஓம் ஹாம் சநந்தாயவஷட் ஓம்ஹாம் சநாதநாயவஷட் ஓம்ஹாம் சநத்குமாராயவஷட் ஓம்ஹாம் கபிலாயவஷட் ஓம்ஹாம்பஞ்சசிகாயவஷட் ஓம்ஹாம் ருஷபேவஷட் என்று மாநவதீர்த்தத்தால் சப்த மநுஷ்யர்களுக்குச் சிறுவிரலடியினாலே தர்ப்பிக்க.

ஓம்ஹாம் சர்வேப்யோ பூதேப்யோ வௌஷட் என்று கரதலமூலத்தால் பஞ்சபூதங்களுக்கும் தர்ப்பிக்க,

பின்பு, வலமாக உபவீதமிட்டுத் தர்ப்பையை மடித்து எள்ளுடன் ஜலத்தால் ஓம் ஹாம் கவ்யவாகாயஸ்வதா ஓம் ஹாம் அநலாயஸ்வதா ஓம்ஹாம் சோமாயஸ்வதா ஓம் ஹாம் யமாயஸ்வதா ஓம் ஹாம் அர்யம்ணேஸ்வதா ஓம் ஹாம் அக்நிஷ்வாத்தாய ஸ்வதா ஓம் ஹாம் பரிஹிஷிப்யஸ்வதா ஓம் ஹாம் ஆஜ்யபாயஸ்வதா ஓம் ஹாம் சோமபாயஸ்வதா என்று தேவபித்ருக்களையும், ஓம் ஹாம் ஈசாயபிதரே ஸ்வதா ஓம் ஹாம் சதாசிவாயபிதாமஹேப்யஸ்வதா ஓம் ஹாம் சாந்தாயப்ரபிதாமஹேப்யஸ்வதா என்று விசேஷபித்ருக்களுக்கும்,

ஓம் ஹாம் பித்ருப்யஸ்வதா ஓம் ஹாம் ப்ரபிதாமஹேப்யஸ்வதா ஓம்ஹாம்வ்ருத்தப்ரபிதாமஹேப்யஸ்வதா ஓம் ஹாம் மாத்ருப்யஸ்வதா ஓம்ஹாம் மாதாமஹிப்யஸ்வதா ஓம் ஹாம் ப்ரமாதா மஹிப்யஸ்வதா ஓம் ஹாம் வ்ருத்தப்ரமாதா மஹீப்யஸ்வதா ஓம் ஹாம் சர்வேப்யே பித்ருப்யஸ்வதா என்று ப்ரேத பித்ருக்களுக்கும்,

ஓம்ஹாம் மாதாமஹிப்ய ஸ்வதா ஓம் ஹாம் பிதாமஹிப்ய ஸ்வதா ஓம் ஹாம் ப்ரபிதா மஹிப்யஸ்வதா ஓம் ஹாம் ஸர்வேப்யோ ஞாதிப்ய ஸ்வதா ஓம் ஹாம்

ஸர்வேப்யோ ஆசார்யேப்யஸ்வதா ஓம் ஹாம் திக்ப்ய ஸ்வதா ஓம் ஹாம் திக்பதிப்ய ஸ்வதா ஓம் ஹாம் சித்தேப்யஸ்வதா ஓம் ஹாம் மாத்ருப்யஸ்வதா ஓம் ஹாம் க்ரஹேப்யஸ்வதா ஓம் ஹாம் நக்ஷத்ரேப்யஸ்வதா என்றும் தர்ப்பித்து முன்சொல்லியபடி பிதுருக்களைப் பிரார்த்தித்து மற்றைய கிரியைகளையுஞ்செய்க.

பின்பு ஆசமனமும் சகளீகரணமுஞ்செய்துமூலமந்திரத்தை ஹ்ரஸ்வ உச்சாரமாக ஜெபித்து அங்குச முத்திரையால் அமிர்தத்தை பிந்துஸ்தானத்தில் ஒடுக்கிக்கொண்டு த்விஜர்கள், சாவித்ரியோடு சம்ஹிதாமந்திரத்தையும் மற்றையோர்கள் சம்ஹிதாமந்திரத்தைமாத்திரமுஞ்ஜெபித்து சூரியமண்டலத்திலமரும் சிவனைத்தியானித்து மூலமந்திரத்தை யதா சக்தி ஜெபித்து அனுட்டானபலனை அவருக்குத் தர்த்தஞ்செய்க.

பின்பு பதுமாசனம் முதலிய ஆசனங்களில் உட்கார்ந்துகொண்டு பிராணாயாமமும் சகளீகரணமுஞ்செய்து மூலமந்திரத்தை நூற்றெட்டுரு அல்லது சக்தியாநுசாரமாகவும் அகோரமந்திரதனை இருபத்தோருருவும் ஜெபிதது சகளீகரணஞ்செய்து விபூதி தரிததுக்கொள்க.

சந்தியாகாலம் தவறின், ஒருதரம் சம்ஹிதாமந்திரத்தை ஜெபிக்க. சந்தி ஒன்று தவறின் நூறு உருவும், இரண்டுந்தவறின், இருநூறு உருவும், மூன்றுந்தவறின் முந்நூறு உருவும், நாலுந்தவறின், இரண்டாயிரம் உருவுமமூலமந்திரத்தை ஜெபிக்க. மற்றையபிராயச்சித்தங்களை ஆசாரியர்மூலமாய்த்தெரிந்துகொள்க.

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

ஸ்ரீஜ்ஞானஸம்பந்தகுருப்யோநம:.

---

# அனுட்டானவிதிப்படலம்.

---

திரிசிரபுரம் மஹா வித்துவான்

மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்களால்

இயற்றியது.

---

இஃது

தூத்துக்குடி:

சைவசித்தாந்தசபையாரால்

மாயூரப்புராணத்திலிருந்து

எடுத்து

சைவப்பிரகாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1895.

சிவமயம்.

# அனுட்டானவிதிப்படலம்.



வடதிசைநோக்கியிருந்திறைகுருவைமனங்கொடு மோனமாய்ப்பூதி, திடமுறப்பூசல்வேண்டுமொண்குர வன்றெய்வநல்வித்தையோரெழுநா, வடர்பொல்லாப் பூமிநீசர்முன்னிடுதலடாதுமண்பார்த்தொருகையாற், றடவுமோர்விரலாலணிதரினிரயந்தவாதுறுமென்பர்க ற்றுணர்ந்தோர். (க)

நிலமுறநீரேரணுத்துணைவீழ்த்தினிரயமோண்ணு தல்சரதஞ், சலமிலாமனைசேய்கமண்டலங்கலிங்கஞ்ச யனநீரெருதனக்குளவே, நலமுறுதனக்காஞ்சாதனம் பூதிநாத்திகர்கொடைப்பயனுறி, யிலர்வடதிசைநோக் கிடுதலின் முத்தியியல்கிழக்குறுபுத்தியெய்தும். (உ)

மகாகணபதியோமவெனச்சிரத்துவண்கரமுட்டி செய்தறைந்தே, யுகாதவன்போங்கக்குரவனைவணங்கி யொளிரநாமிகையொடங்குட்ட, மிகாதமத்திமையுஞ் சேர்த்தரன்கண்ணுலெண்ணுபுமூலமந்திரத்தை, நகா வெழுநிரீக் கணஞ்செயாவயங்குநயங்கொளத்திரபதந கையினல். (ங)

அறைதருபுரோக்கணஞ்செய்தும்படர்ந்தவத்திரமோதித்தற்சனியாற், குறைவிருடனஞ்செய்தப்பியுக்கணந்தான்கொளும்வவுசடந்தகவசத்தா, னிறைதருபதாகையியற்றிநற்படர்ந்தநிகழ்தருமத்திரம்பன்னி, யுறையுமத்திமைதற் சனியினுலிடக்கையுண் மூக்காலறைந்திடல்வேண்டும். (ச)

மற்றிதுதாளத்திரயமார்திக்ஞப்பர்தனம்வயங்குதற்சனியை, யுற்றவங்குட்டத்தடியுறச்சேர்த்தேயோங்குபூருவதிசைமுதலாச், சொற்றவீசானத்தளவுமோரெட்டுந்துகளறுபடர்ந்தவத்திரத்தாற், பற்றறத்தெறித்தலினியவகுண்டனத்தையும் பகருதுங்கேண்மோ. (ரு)

தருவவுசடந்தகவசத்தைமொழிந்துதற்சனியால்வளைத்திடுதெ, லொருவலக்கரத்துக்கனிட்டையற்றிடக்கையுறுமநாமிகையைமற்றிடக்கை, மருவியகனிட்டைவலத்தநாமிகையை வலக்கைமத்திமையிடக்கரத்துப், பெருகுதற்சனியையிடத்துமத்திமையைப்பேண்வலத்தற்சனிபொருத்தி. (சா)

மூலமந்திரத்தைநவின்றுவண்டேனுமுத்திரைகொடுத்துமற்றதற்பின், சாலவுமிருகையங்குட்டம்பின்னித்தகவிரித்துறவவுசடந்த, மூலமந்திரத்தைமொழிந்திணிதமைமாமுத்திரைகொடுத்ததன்பின்னர், சாலவொள்வலக்கையங்குட்டங் கனிட்டைதவிர்ந்தமூவிரலினுண்மன்றோ. (எ)

வருசுவாகாந்தவத்திரநவின்றுவயங்குநீர்தோய்த்தொ
ருமுக்கா, லொருதலைமிசைப்புரோக்கணஞ்செய்தாங்
குட்கையங்குட்டங்கண்மடக்கி, மருவுறச்சேர்த்துமலி
சுவாகாந்தமனுவெனுமத்திரங்கூறிப், பொருவருமுக்
காலத்திரசந்திபொலிதரத்தருப்பித்தபின்னர். (அ)

மீட்டுமம்மனுவைப்பத்துருச்செபித்துவிளங்கவோ
ர்காற்புனலிறைத்து, நாட்டுகோகன்னமுத்திரைகொ
ண்டுநல்லுழுந்தழுந்துநீர்முக்கா, லீட்டுதத்துவமோர்
மூன்றையுமுறையினியம்பியாசமித்துக்கைகழுவி,வே
ட்டுநல்லதரத்திருபுறங்கீழும் விளங்கவத்திர மிருதயத்
தால். (௯)

மன்னியபதாகைகொண்டுறத்துடைத்துவயங்குறக்
கரசுத்திசெய்து, மின்னியவிதயத்திடங்களீராறும்விள
ங்கநாமிகையொடங்குட்டந், துன்னியசேர்த்துவலமு
தலாகத்தொட்டிருகையுமத்திரத்தா, னன்னியமத்திற்
றுடைத்துநீறெடுத்து நலங்கொளவிடக்கையினமைத்
து. (௧0)

உரைநிரீக்கணம்புரோக்கணமொளிர்தாடனமப்பியு
க்கணஞ்செய்து, புரைதவிர்கற்பமாதியேல்விளங்கிப்
பொலிதருசங்கிதைபுகன்று, கரைதருங்கற்பமெனிலத
ஞேடுகலைகளுநவின்றிடையூறு, வரைசெயமனுவத்திர
த்தினலணுவின்வரைநிருத்தித்திசைதெறித்து. (௧௧)

தலைமுதற்ருளீறத்திரபீசஞ்சாற்றியொள்வலக்கைநீ
றிட்டு நிலைபெறுமமலநானமாக்குறித்துநீரினைக்கனிட்
டையல்லாத, வுலைவிலாவிரலாலொளிர்நிரோதானைமுற
வெடுத்தியறருகவச, மலைவறக்கூறிக்குழைத்துத்தமா
ங்கமுதன்முழுந்தாள்வரைமாதோ. (௧௨)

ஓங்குமீசானமாதியைந்தாலுமொளிபெறத்தரித்து
நீர்தொட்டுப், பாங்குசாலிருகையிடங்களோராறும்பக
ர்ந்தவாமாறுபுதரித்துத், தேங்குசீர்க்கண்டமுதகிரண்
டாயசெவியிவற்றினுமுதனான்கு, நீங்குமந்திரமொன்
ருலுறப்புனைந்துநிலவுகைகவசத்தாற்கழுவி. (௧௩)

கும்பமுத்திரைகொண்டுரைந்தவோரைந்துங்குறிக்
கொளச்செபித்துமூலத்தாற், கம்பமிறலைமேற்றெளித்
திடலாக்கிநேயநானம்மெனக்கரைவார், வம்பவிழ்பூகிசி
தறியதிதயம்வந்ததாப்பாவித்தல்வேண்டு, நம்டவொண்
டாளத்திரயஞ்செய்திதயநன்மனுவுச்சரித்தம்மா. (௧௪)

குறிநுதன்மார்புதோளடியிவைக்கங்குலமிருமூன்றும
ற்றவைக்கொன், றறிதரத்திரிபுண்டரஞ்செயலிதன்மே
லதிகம்வாழ்நாள்கெடுங்குறையிற், செறிதருதவம்போ
மிதுவிபூதியினற்செய்திடுநானமாசமித்து,மறிவின்மூல
த்தாரமுதினனைத்தன்மானதநானமாமன்றே. (௧௫)

முறைவவுசடந்தசத்திமந்திரத்தைமொழிந்திருகை
களுங்குவித்து, நிறைசிவாசனமுமூர்த்தியுமங்கைநிகழு
மங்நட்டத்தாலமைத்துக், குறைவிறற்சனியாலங்குட்
டவிரல்வ்குட்டத்தாற்றற்சனியாதி, கறையிலீசானமா
தியைந்தோதிக்கரிசறநிசித்திடல்வேண்டும். (௧௬)

இருகரநடுவுளுகளவங்குட்டமியைத்திடல்வித்தியா
தேக, மருவுமத்திமவங்குலியிருமூன்றும்வளைத்திடனே
த்திரமாகும், பொருவிலங்குட்டமிரண்டுமுன்வளைத்து
ப்பொலிதருமூலத்தஞ்சலித்தே, யொருவருமிதயாதியி
னமசுவாகாவுறுவசடோவவுசட்டாம். (கஎ)

தகவிதயாதியாற்கனிட்டாதித்தற்சனியந்தமங்குட்
ட, நகநிசித்திட்டத்திராயவும்படுவர்னல்லவங்குட்டத்
திற்பொருந்த, மிகவமைதருதற்சனியினுனிசித்துமிளி
ர்வவுசடந்தகவசத்தா, லிகவில்கைசுற்றிவவுசடுமூலத்
திருகையுங்குவித்திடல்வேண்டும். (கஅ)

அறைதருமீதுகரநியாசம்பினங்குட்டமநாமிகைசே
ர்த்து, முறைதருமுண்மைச்சிவாசனமூர்த்திமொழிந்
திரயத்திடைநிசித்து, நிறைதருமுட்டிபிடித்தங்குட்ட
ஞ்சேர்நிலவுதற்சனுதிகள்கொண்டு, பொறைதருமிசா
னுதியைந்தோதிப்பொலிசிரமுதற்சானுவளவும். (கக)

நலமுறநிசித்தங்குட்டமுமனுமிகையுநயம்பொருந்தி
டச்சேர்த்துங், குலநடுவிரலோர்மூன்றையுநீட்டிக்குறி
த்தமற்றிருவிரன்மடக்கி, யலமுறவிதயம்வித்தியாதே
கமக்கத்துநேத்திரங்கொடுத்துச், சலமிலங்குட்டமநா
மிகைசேர்த்துமூலத்தாலிதயத்திற்சார்த்தி. (உ0)

இருதயமுதன்மூன்றிடத்தினங்குட்டமியைதருகனி ட்டைமுன்மூன்ருன், மருவுறநிசித்துத்தற்சனியிரண் டால்வளவியகண்டத்தைச்சுற்றிக், கருதிடையளவிற் கவசத்தையெண்ணிக்கரிசறநிசித்தநாமிகைக, ளொரு வலமுதலாயகங்கையத்திரத்தையுரைசெயா நிசித்திட ல்வேண்டும். (உக)

பரவுகைத்தலத்திற்ருளமோர்மூன்றும்படவத்திரத் திஞற்செய்து, விரவுசோடிகையும்படர்தவத்திரத்தா ன்மிளிர்சிறந்திக்குப்பந்தனஞ்செய், துரவுகொள்கவச ம்வவுசடந்தத்தோடுரைத்தவகுண்டனமியற்றி, யிரவு தீர்மூலத்தடிமுதற்சென்னி யீறிருகைவிரித்துயர்த்தல். (உஉ)

புண்ணியந்தருமாமுத்திரையீதுபுகலங்கநியாசமெ ன்றுரைப்பர், நண்ணியவளமாற்சனமினிப்புகல்வாநம் பிராணுகமப்படியே, யண்ணியவலக்கையங்குட்டமத ஞலவிர்வலநாசியையடைத்துக், கண்ணியவிடப்பாஞ சியத்திரத்தாற்கவினுறச்சோதனைபுரிந்து. (உங)

பின்னருமிடப்பாஞசியைவலக்கப்பிறங்கநாமிகை யிஞலடைத்து, நன்னர்கொள்வலப்பாஞசியைத்திறந் துநயங்கொண்முன்மந்திரம்பகர்ந்து, பின்னமொன்றி ல்லாச்சோதனைசெய்துபிறங்கமுன்போல்வலம் புதைத் துத், தன்னமொன்றில்லாச்சங்கிதையோதித்தக்கவா பூரகஞ்செய்து, (உச)

அறையுமவ்விடப்பாணுசியையவலக்கையநாமிகையா லுறப்புதைத்து, நிறைதரமுன்போற்சங்கிதையோதி நிகழ்தராவண்ணங்கும்பித்து, முறைவலநாசிதிறந்துச ங்கிதையான்முனிவறவிரேசகஞ்செய்து, குறைவிலவ் வலக்கைவலச்செவிமூலங்கூறிவைத்திடுதலாயாமம். ()

ஆன்றவங்குசமுத்திரையினல்விந்துவாரமுதினைவ வுசடந்த, மேன்றவிதயஞ்சொற்றெடுத்துநீரிடைவை த்தியைமூலத்தாற்சிவதீர்த்தந், தோன்றநன்காக்கித்திக் குப்பந்தனமுற்சொல்லியவனைத்தையுஞ்செய்து, சான் றவர்புகழுந்தியானமேற்செய்யத் தக்கதென்றுரைப்ப ராய்ந்துணர்ந்தோர். (உகூ)

திருமுகநான்கெண்விழிவலஞ்சிருக்குச்செபமிடங்க மண்டலந்தண்ட, மருமமுந்நூல்செவ்வாடைமெய்ம்ம ணிப்பூண்வண்பதுமாசனமிளமை, பொருவில்சத்துவ மஞ்சடையுடைப்பிராமிபொன்னடிப்போதுவைகறை வா, ஞெருவறவுடுக்கள்விளங்கிடுகோலத்துன்னுகவிருத யத்துறுத்தே. (உஎ)

ஒருமுகமிருகண்சதுர்ப்புயமபயமொளிர்கதைவலமி டஞ்சங்கம், பொருதிறலாழிவெண்ணிறந்துாசுபூந்துழா ய்பொலிதருமுந்நூற், றருணமொண்பதுமாசனம்பொ ற்பூணுகாசனனிராசதமிவையுடைய, திருவையுச்சிப் போதொளிர்தருபுருவந்திகழ்தருநாப்பணுன்னுகவே. ()

தனிமுகமுக்கண்செபவடஞ்சூலந்தகுவலமிடஞ்சத்
தியபய, நனியெழினீலநிறஞ்சடையதன்பானகுபிறை
யாதனம்பதுமந், துனிதவிரிடபந்தாமதகுணஞ்சாறாய
விரவுத்திரிதன்னைக், கனிதருபிரமரந்தரத்தினனோர்
பாதிகாணந்தியிற்குறியே. (உகூ)

மூவருஞ்செயற்குச்சான்றினரென்றுமுன்னிநாலாவ
துசந்தி, மேவருஞ்சத்தியுருவலாவுருவைமேதகவெண்
ணுகவெண்ணிப், பாவருந்தீர்த்தம்வலக்கையாலெடுத்
துப்பரவுறுமிடக்கையிற்சேர்த்தே, யோவறும்வலக்கை
யதனடிச்சார்த்தியோங்குறுசங்கிதைகூறி. (கூ0)

வரவவுசடந்தமூலஞ்சொற்றொருகால்வண்கும்பமு
த்திரைபிடித்துச், சிரமிசைத்தெளித்துப்பின்னுமந்நீ
ரிற்பிறங்கியசங்கிதைசெப்பி, விரவுறவெடுத்தாங்கிடக்
கையினமைத்துவீழ்சலம்வவுசடந்தஞ்சால், பரவுசங்கி
தையாற்சிரமிசைப்பொருந்தப்பதினொருதரம்புரோக்
கணித்தல். (கூக)

ஈதுமார்ச்சனமாமிடக்கரத்தொழுக்கினெஞ்சுநீர்வல
க்கரத்தேந்தித், தீதுதீர்விசேடபாவனைசெய்துதிருந்தி
டநாசியிற்புகுந்து, மோதுபாதகத்தையரித்துமைக்குழ
ம்பாய்முகிழ்வல்நாசியின்வழிக்கீழ்ப், போதுவதாகவெ
ண்ணியும்படக்கீதவத்திரமந்திரம்புகன்று. (கூஉ)

முனிவொடுவெல்ப்பாலழனிறவயிரக்கன்மிசைமுருங்
கவிட்டிடுக, துனிதவிரீதேயகமருடணமாந்தூயநீராச
மித்ததன்பி, னணியுயர்சகளீசரணமுஞ்சமைத்துநாடுக
வசத்தினீரள்ளி, யினிதுறத்தன்னைவளைத்துமாதேவனி
ணையடியியானித்தல்வேண்டும். (௩௩)

குசையுடன்காயத்திரிமனுமூலங்கூறுபுமும்முக்காற்
றற்பித், திசைதரவவைபப்பத்துருக்கணித்திட்டெழி
ன்மிகுசங்கிதைபேசி, நசைபெறவொருகாற்றற்பித்தே
ரம்பனகுசுடர்வேற்கரக்கந்த, னசைவறகவுரிமனுக்க
ளொவ்வொருகாலறைந்துதற்பித்திடன்முறையே. ()

கதிர்மனுமுக்காற்கூறிநீரிறைத்துக்காமருமந்திரந்
தேவர், பிதிர்தலின்மனுவோதுபுகரநுதியாற்பிரங்க
வொவ்வொருதரந்தற்பித், ததிர்தலினிருடிக்கங்குலியி
டையான்மக்கட்குக்கனிட்டையினடியா, னுதிர்வில்பூ
தங்கட்குறுமணிக்கட்டாலெனிர்பிதாமாதாஞாதிருவே
(௩௫)

ஆசான்மற்றிவர்க்குத்தற்சனிவிரலங்குட்டநள்ளெள்
ளொடுமொருகா, னேசாரத்தற்பித்திடுவதுமுறையாநி
கழ்சுவாகாந்தமந்திரத்திற், கேசாரத்தேவரிருடியர்தங்
கட்கியைதருநமோந்தமானுடர்க்கு, மாசாராவவுசடந்
தமாம்பூதமகிழ்ச்சிமீக்கொளும்வவுசட்டால். (௩௬)

பிதிரர்கடமக்குச்சுதாவெனப்புகல்வர்பின்னுமாச மனநன்னியாச, முதிர்தரச்செய்துநகுபிராசாதமொழி ந்துமுன்சொற்றமுத்திரையா, லுதிர்தராதமுதம்விந்து விளைடுக்கியொண்கதிர்மண்டலத்தமரு, மெதிரிலாப் பரனைப்பணிந்துமூலஞ்சொற்றிகமற்றவனுக்கப்பலனை (கூஎ)

சந்திதற்காலந்தப்பிடிலொருகாற்சங்கிதையுரைத்தி டல்வேண்டுஞ், சந்தியொன்றொளியிற்சாதநூறிரண் டேற்சாற்றியதோரிருநூறாற், சந்திமூன்றொழியினது முந்நூறுரைத்துத்தவிர்ந்திடவேண்டுமென் றுணைவைச், சந்திநாலாவதொழிந்திடிலிரண்டு சதஞ்செபித்திடல்வ ழக்காமால். (கூஅ)

பிணியினர்பன்னுட்டவறிலாயிரமோர்பிணியிலார்த வறினீரயுதந், தணிதரப்புகன்றுபாதகமுறுங்கத்தக்கதா மோமமுமாற்றிப், பணியணிப்பெருமாற்கினியதென் றெவரும்பகரபிடேகமுஞ்செய்து, கணிதமிலடியார்க்கி ரும்பொருள்வழங்கிக்கைகுவித்திறைஞ்சுதன்மரபால்.

சந்தியிவ்வாறுமுடித்தவன்பதுமாசனத்தமர்ந்தியை யவாயாம, முந்தியசகளீகரணநன்கியற்றிமூலமந்திரத் துநூற்றெட்டு, நந்தியகணித்துவிருப்புண்டேன்மேலு நவின்றகோரமுமுடிபுரைத்தே,யுந்தியசகளீகரணம்பி ன்னருஞ்செய்தொண்பூதிதரித்திடன்முறையே. (சo)

முற்றிற்று.